அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

## श्रीजगद्गुरुग्रन्थमाला

ஸ்ரீ ஜக³த்³கு³ரு க்³ரந்த²மாலா

# ॥ हनुमत्पञ्चरत्नम् ॥

# ஹனுமத் பஞ்சரத்னம்

ஸ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.
1966



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை

ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளின் அனுக்ரஹத்தினுல் அமைக்கப்பட்ட அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் முக்கிய நோக்கம் ஸ்ரீ பகவத்பாதாளின் க்ரந்தங்களை அனுவாதத்துடன் பிரசுரித்து குறைந்த விலையில் எல் லோருக்கும் கிடைக்கும்படி செய்து ஆசார்யாளுடைய உபதேசங்களை எங்கும் பரவ ச்செய்வதே. இந்நோக்கத்துடன் பிரசுரிக்கப்படும் **"ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா"** வின் **'ஹனுமத் பஞ்சரத்னம்'** இது.

இந்த ஸ்தோதிரத்திற்கு சிருங்கேரி மடம் ஆஸ்தான வித்வான் வித்யாபூஷ ணம் ஸ்ரீ **K.S. நரஸிம்ம சாஸ்திரி**கள் பதவுரை, கருத்துரை எழுதித் தந்துள்ளார்கள்.

இந்த ஸ்தோத்திரங்களில் பொதிந்துள்ள கருத்துக்களைத் தெரிந்து பக்தியுடன் பாராயணம் செய்வதால் ஸ்ரீ ஆசார்ய அனுக்ரஹத்துடன் எல்லா அபீஷ்டங்களையும் பெறலாம்.

**K.V. சுப்பரத்னம் அய்யர்**,
பொதுக் காரியதரிசி,
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

---

॥ श्रीः ॥

॥ ஸ்ரீ: ॥

# ॥ हनुमत्पञ्चरत्नम् ॥

# ஹனுமத் பஞ்சரத்னம்

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.

**वीताखिलविषयेच्छं जातानन्दाश्रुपुलकमत्यच्छम् ।**
**सीतापतिदूताद्यं वातात्मजमद्य भावये हृद्यम् ॥ १ ॥**

**வீதாகி2லவிஷயேச்ச2ம் ஜாதானந்தா3ஶ்ருபுலகமத்யச்ச2ம் ।**
**ஸீதாபதிதூ3தாத்3யம் வாதாத்மஜமத்3ய பா4வயே ஹ்ருத்3யம் ॥ 1 ॥**

| | | |
|---|---|---|
| **वीताखिलविषयेच्छं**<br>**வீதாகி2லவிஷயேச்ச2ம்** | = | எல்லா விஷயங்களிலும் ஆசையைத்துறந்த வரும், |
| **जातानन्दाश्रुपुलकं**<br>**ஜாதானந்தா3ஶ்ருபுலகம்** | = | ஆனந்த பாஷபத்துடனும் ரோமாஞ்சத்துடனும் கூடியவரும், |
| **अत्यच्छं**<br>**அத்யச்ச2ம்** | = | மிகப்பரிசுத்தமானவரும், |
| **सीतापतिदूताद्यं**<br>**ஸீதாபதிதூ3தாத்3யம்** | = | ஸீதாநாயகனுன ஸ்ரீ ராமரின தூதர்களுள் முதன்மையானவரும், |
| **हृद्यं**<br>**ஹ்ருத்3யம்** | = | பிரியமானவருமான, |
| **वातात्मजं**<br>**வாதாத்மஜம்** | = | வாயுகுமாரனுன ஹநுமாரை, |
| **अद्य**<br>**அத்3ய** | = | இப்பொழுது, |
| **भावये**<br>**பா4வயே** | = | தியானிக்கிறேன். |

எல்லாவித (பொன், மண், பெண்,) விஷயப் பற்றற்றவரும், எப்பொழுதும் ஸ்ரீ ராமத்யானத்திஞல் ஏற்படும் ஆனந்தக் கண்ணீரையும் சிலுக்கும் ரோமாஞ்சித சரீரத்தையுமுடையவரும் மிக்கத் தூய்மை வாய்ந்தவரும் சீதாபிராட்டியின் கணவன் ஸ்ரீ ராமனின் தூதர்களுக்குள் தலை சிறந்தவரும் பக்தர்களின் ஹிருதய த்தில் குடிகொண்டவரும் எல்லோருக்கும் பிரியமானவரும் வாயு தேவனின் புத்ரனுமான ஹநுமாரை இப்பொழுது தியானம் செய்கிறேன்.

ப்ரஹ்மசர்ய நியமங்களை பூர்ணமாக நடத்திவரும் ஹனுமாருக்கு உலகப் பொருள் ஒன்றிலும் ஆசை கிடையாது ஸதா ராம குணங்களை அனுஸந்தானம் செய்வதால் அவர் கண்ணில் ஆனந்தபாஷ்பமும் சரீரத்தில் மயிர்க்கூச்சும் எப்பொழுதும் ஏற்பட்டுக்கொண்டேயிருக்கும். அவருடைய மனது, வாக்கு, சரீரம் எல்லாம் லவலேசங்கூட தோஷமின்றி மிகப் பரிசுத்தமானது. ராமர் அனுப்பிய தூதர்களில் இவரே ஸீதையிருக்குமிடம் கண்டுபிடித்து வந்ததால் எல்லோரினும் சிறந்தவர். எல்லோராலும் ப்ரீதியுடன் போற்றப்படும் மூர்த்தி. (1)

**तरुणारुणमुखकमलं करुणारसपूरपूरितापाङ्गम् ।**
**सञ्जीवनमाशासे मञ्जुलमहिमानमञ्जनाभाग्यम् ॥ २ ॥**

**தருணாருணமுக²கமலம் கருணாரஸபூரபூரிதாபாங்க³ம் ।**
**ஸஞ்ஜீவனமாஶாஸே மஞ்ஜுலமஹிமானமஞ்ஜநாபா⁴க்³யம் ॥ 2 ॥**

| | | |
|---|---|---|
| **तरुणारुणमुखकमलं** **தருணாருணமுக²கமலம்** | = | இளம்சூரியன்போல் சிவந்த வதனாரவிந்தமுள்ள வரும், |
| **करुणारसपूर** **கருணாரஸபூர** | = | தயை என்னும் ரஸப்ரவாஹத்தால், |
| **पूरितापाङ्गं** **பூரிதாபாங்க³ம்** | = | நிறைந்தகடைக்கண பார்வையுள்ளவரும், |
| **सञ्जीवनं** **ஸஞ்ஜீவனம்** | = | சிரஞ்ஜீவியாக நன்கு வாழபவரும், ஸஞ்ஜீவி மலையைகொண்டு வந்து எல்லோரையும் ஜீவிக்கச்செய்தவரும, |
| **मञ्जुलमहिमानं** **மஞ்ஜுலமஹிமானம்** | = | அழகிய சிறந்த மஹிமையுள்ளவரும், |
| **अञ्जनाभाग्यं** **அஞ்ஜநாபா⁴க்³யம்** | = | அஞ்ஜனாதேவியின் பாக்யமானவரும் (புத்ரனும்) ஆன ஹனுமாரை, |
| **आशासे** **ஆஶாஸே** | = | பிரார்ததிக்கிறேன். |

உதிக்கும் இளம் சூர்யன்போன்ற சிவந்த ஒளிவீசும் முககமலத்தையுடையவரும் கருணாரஸப்ரவாஹம் நிறைந்த கடைக்கண் பார்வையுடையவரும், சிறந்து எல்லோருக்குமுதவும் மஹிமையுடையவரும் அஞ்ஜநா தேவியின் தவப்பயனை பாக்யமாக விளங்குபவருமான ஸஞ்ஜீவனன் என்னும் (சிறந்த நீண்டகால வாழ்க்கையையுடையவன் சிரஞ்ஜீவி) காரணப் பெயர் பெற்றவனுமான ஹனுமானை பிரார்த்திக்கிறேன். (2)

**शम्बरवैरिशरातिगमम्बुजदलविपुललोचनोदारम् ।**
**कम्बुगलमनिलदिष्टं बिम्बज्वलितोष्ठमेकमवलम्बे ॥ ३ ॥**

**ஶம்ப3ரவைரிஶராதிக3மம்பு3ஜத3லவிபுலலோசனோதா3ரம் ।**
**கம்பு3க3லமனிலதி3ஷ்டம் பி3ம்ப3ஜ்வலிதோஷ்ட2மேகமவலம்பே3 ॥ 3 ॥**

**शम्बरवैरिशरातिगं** = சம்பரனின் சத்ருவான மன்மதனின்
**ஶம்ப3ரவைரிஶராதிக3ம்** பாணத்தை மீறிச்செல்பவரும்,
**अम्बुजदल** = தாமரை இதழ்போல,
**அம்பு3ஜத3ல**
**विपुल** = அகன்ற,
**விபுல**
**लोचनोदारं** = கண்களால் சிறந்து விளாங்குபவரும்,
**லோசனோதா3ரம்**
**कम्बुगलं** = சங்கம் போன்ற கழுத்து உள்ளவரும்,
**கம்பு3க3லம்**
**बिम्बज्वलितोष्ठं** = கோவைப்பழம்போல் சிகப்பாக பிரகாசிக்கும்
**பி3ம்ப3ஜ்வலிதோஷ்ட2ம்** உதடுகளையுடையவரும்,
**अनिलदिष्टं एकं** = வாயு தேவனின் பாக்யமான ஹனுமார்
**அனிலதி3ஷ்டம் ஏகம்** ஒருவரையே,
**अवलम्बे** = பற்றிக் கொள்கிறேன்.
**அவலம்பே3**

ஜிதேந்திரியராதலால் மன்மத பாணங்களுக்கு இலக்காகாதவரும் தாமரை இதழ்போல் அகன்ற கண்களினாலேயே தனது வள்ளல் தன்மையை வெளியிடு பவரும் வலம்புரி சங்கம் போன்ற கழுத்தையுடையவரும், கோவைப்பழம்போல் சிவந்தொளிக்கும் உதடுகளையுடையவரும், ஒப்பற்றவரும் வாயுதேவனின் அதிருஷ் டமோவென விளங்கும் ஹனுமானை சரணமடைகிறேன். (3)

**दूरीकृतसीतार्तिः प्रकटीकृतरामवैभवस्फूर्तिः ।**
**दारितदशमुखकीर्तिः पुरतो मम भातु हनुमतो मूर्तिः ॥ ४ ॥**

**தூ3ரீக்ருதஸீதார்திஃ ப்ரகடீக்ருதராமவைப4வஸ்பூ2ர்திஃ ।**
**தா3ரிதத3ஶமுக2கீர்திஃ புரதோ மம பா4து ஹனுமதோ மூர்திஃ ॥ 4 ॥**

**दूरीकृतसीतार्तिः** = ஸீதா தேவியின் துன்பங்களை விலகச்செய்ததும்,
**தூ3ரீக்ருதஸீதார்திஃ**
**प्रकटीकृतरामवैभवस्फूर्तिः** = ஶ்ரீராம மாஹாத்ம்யப்ரகா சத்தை
**ப்ரகடீக்ருதராமவைப4வஸ்பூ2ர்திஃ** வெளிப்படுத்தியதும்,
**दारितदशमुखकीर्तिः** = ராவணனின் புகழை அழித்ததுமான்,
**தா3ரிதத3ஶமுக2கீர்திஃ**

**हनुमतो मूर्तिः** = ஆஞ்ஜநேயரின் உருவம்,
**ஹனுமதோ மூர்தி꞉**
**मम पुरतः** = என் முன்னால்,
**மம புரத꞉**
**भातु** = விளங்கட்டும்.
**பா4து**

சீதா தேவியின் கஷ்டங்களை விலக்கியதும் ஸ்ரீ ராமனின் மஹிமை எங்கும் பிரகாசிக்கும்படி வெளிப்படுத்தியதும், ராவணனின் புகழை அழித்ததுமான ஹநுமானின் உருவம் என்னெதிரில் விளங்கவேண்டும். (4)

**वानरनिकराध्यक्षं दानवकुलकुमुदरविकरसदृक्षम् ।**
**दीनजनावनदीक्षं पवनतपः पाकपुञ्जमद्राक्षम् ॥ ५ ॥**

**வானரநிகராத்4யக்ஷம் தா3னவகுலகுமுத3ரவிகரஸத்3ருக்ஷம் ।**
**தீ3னஜனாவநதீ3க்ஷம் பவனதப꞉ பாகபுஞ்ஜமத்3ராக்ஷம் ॥ 5 ॥**

**वानरनिकराध्यक्षं** = வானரா கூட்டத்திற்குத்தலைவரும்,
**வானரநிகராத்4யக்ஷம்**
**दानवकुल** = ராக்ஷஸக்கூட்டமாகிற,
**தா3னவகுல**
**कुमुद** = அல்லி மலருக்கு,
**குமுத3**
**रविकरसदृक्षं** = சூரிய கிரணம் போன்றவரும்,
**ரவிகரஸத்3ருக்ஷம்**
**दीनजनावनदीक्षं** = தீன ஜனங்களைக் காப்பாற்றுவதை
**தீ3னஜனாவநதீ3க்ஷம்** நியமமாகக்கொண்டவரும்,
**पवनतपः पाकपुञ्जं** = வாயு தேவனுடைய தவப்பயனின் கூட்டமே
**பவனதப꞉ பாகபுஞ்ஜம்** உருவமெடுத்ததுமான ஹனுமாரை,
**अद्राक्षम्** = பார்த்தேன்.
**அத்3ராக்ஷம்**

வானரர் கூட்டத்தலைவனாகவும் அசுர குலமாகும் அல்லிப் புஷ்பத்தை வாடச்செய்யும் சூர்ய கிரணத்திற்கொப்பானவனாயும் வருந்தும் ஜனங்களை ரக்ஷிப்பதையே தனது விருதமாகக் கொண்டவனாகவும், வாயுபகவானின் அருந்தவப்பயனாக விளங்குபவனுமான ஹனுமானைக்கண்டேன். (5)

## एतत्पवनसुतस्य स्तोत्रं यः पठति पञ्चरत्नाख्यम् ।
## चिरमिह निखिलान् भोगान् भुङ्क्त्वा श्रीरामभक्तिभाग्भवति ॥ ६ ॥

**ஏதத் பவனஸுதஸ்ய ஸ்தோத்ரம் ய꞉ பட$^{2}$தி பஞ்சரத்னாக்$^{2}$யம் ।**
**சிரமிஹ நிகி$^{2}$லான் போ$^{4}$கா$^{3}$ன் பு$^{4}$ங்க்த்வா ஸ்ரீராமப$^{4}$க்திபா$^{4}$க்$^{3}$ ப$^{4}$வதி ॥ 6 ॥**

**पञ्चरत्नाख्यं** = பஞ்சரத்னம் என்று பெயர்கொண்ட,
**பஞ்சரத்னாக்$^{2}$யம்**

**एतत्** = இந்த,
**ஏதத்**

**पवनसुतस्य** = வாயுகுமாரனான ஹனுமாருடைய,
**பவனஸுதஸ்ய**

**स्तोत्रं** = ஸ்தோத்ரத்தை,
**ஸ்தோத்ரம்**

**यः** = எவன்,
**ய꞉**

**पठति** = படிக்கிறானோ (அவன்),
**பட$^{2}$தி**

**इह** = இவ்வுலகில்,
**இஹ**

**चिरं** = வெகு காலம்,
**சிரம்**

**निखिलान् भोगान्** = எல்லா போகங்களையும்,
**நிகி$^{2}$லான் போ$^{4}$கா$^{3}$ன்**

**भुङ्क्त्वा** = அனுபவித்துவிட்டு,
**பு$^{4}$ங்க்த்வா**

**श्रीरामभक्तिभाक्** = ராமபக்தியுடன் கூடியவனாக,
**ஸ்ரீராமப$^{4}$க்திபா$^{4}$க்**

**भवति** = ஆகிறான்.
**ப$^{4}$வதி**

ரத்னம்போலமைந்த ஐந்து சுலோகங்களைக்கொண்டதால் பஞ்சரத்னமென்று பெயருடைய இந்த ஹனுமத் ஸ்தோத்திரத்தை படனம் செய்யும் எவரும் இவ்வுலகில் எல்லாவித சுகபோகங்களையும் வெகுகாலம் அனுபவித்து ஸ்ரீராம பிரானிடம் பக்தி நிறைந்தவராவார்.

**ஹனுமத் பஞ்சரத்னம் ஸம்பூர்ணம்**